13th December 1961]

*Virapandi-Kandachipuram Road*

* 2291. *Q.*—SRI P. KUPPUSAMI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

திருக்கோவிலூர் தாலுக்கா வீரப்பாண்டியிலிருந்து கண்டாச்சிபுரம் போக பாதைமடிக்கும் திட்டம் எந்த நிலையி லுள்ளது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The work has not been included under any scheme.

*Senapiratti Panchayat*

* 2293. *Q.*—SRI S. PAKKIRISAMI PILLAI (on behalf of SRI K. R. NALLASIVAM) : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி மாவட்டம், கரூர் வட்டத்தைச் சேர்ந்த சனுப் பிரட்டி பஞ்சாயத்துத் தலைவர் மீது பணக்கையாடல் மற்றும் சட்ட விரோத நடவடிக்கைகள் சம்பந்தமாக சம்மந்தப்பட்ட பஞ்சாயத்து அங்கத்தினர் புகார் விண்ணப்பம் அனுப்பப் பட்டதா ?

(இ) இதன்மீது விசாரணைகள் நடத்தப்பட்டனவா ?

(உ) அதன் முடிவுகள் யாவை ?

(எ) சமீபத்தில் மேற்படி பஞ்சாயத்துக் கணக்குகள் 'ஆடிட்' செய்யப்பட்டனவா ?

(ஐ) கண்ட உண்மைகள் யாது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir. Two petitions have been received from the members of the panchayat, one in January 1961 and the other in June 1961.

(*b*) & (*c*) Yes, Sir. On some of the allegations regarding non-observance of rules and procedure which were found to be true, the president has been warned by the Sub-Collector, Karur. The other allegations regarding misappropriation of panchayat funds are being enquired into by the Sub-Collector, Karur. The Collector who is the Inspector of Panchayats will take necessary action on receipt of report from the Sub-Collector, Karur.

(*d*) The panchayat accounts up to 31st March 1961 have been audited.

(*e*) Certain irregularities in the accounts and procedure have been noticed in audit. Suitable action will be taken as soon as the audit report is finalised and the investigation of the Sub-Collector, Karur, is completed.

*Fertilizers (Distribution)*

* 2295 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of tons of fertilisers distributed district-war for this year and for the last five years; and

(*b*) the additional quantity of fertilizers allotted to the Thanjavur district under the Package Deal by the Government and (by the Ford Foundation) under Foreign aid?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A paper* is placed on the table of the House.

SRI T. S. RAMASWAMI : We are under the impression that under the Package Deal more manures were supplied but from the statement placed on the table of the House, we find that in the Tanjore district there is no appreciable difference after the Package Deal has been introduced. May I know the reason for that?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 1960–61 was the year when the Package Scheme was just inaugurated. In the next year there will be appreciable increase.

SRI N. K. PALANISAMI : In 1956–57 the quantity of fertilizers distributed was 1,25,900 tons but in 1961–62 only 49,579 tons were distributed. May I know why there is so much reduction and will not this reduction affect food production?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Month after month according to the availability of wagons, fertilizers are moved and sometimes figures do vary but if we take into account the entire supply for the year, we will find that the supply position was better than last year.

SRI S. M. ANNAMALAI : ஸார், நம் மாநிலத்திற்கு உரம் எவ்வளவு வேண்டியிருக்கிறது, எத்தனை சதவிகிதம் அதில் கொடுக்கப்படுகிறது? புள்ளி விவரப்படி பார்த்தால், 1959-60-ல் இருந்ததைவிட, ஆண்டுக்காண்டு குறைந்துகொண்டே வருகிறதே, இதை எடுத்துச் சொல்லி மத்திய சர்க்காரிடம் அதிகம் பெறுவதற்கு நம் அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மொத்தத்தில் ஆண்டுக்காண்டு குறைவதில்லை. அதிகமாகத்தான் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால், எவ்வளவு வேண்டுமென்று கோருகிறோமோ அவ்வளவு கிடைப்பதில்லை. அதை அதிகப்படுத்தவும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. அதோடுகூட வேறு சில இனமும் உரத்தில் கிடைக்கிறது.

SRI N. K. PALANISAMI : While race horses and face powders are imported into this country from outside, why not the Government take steps to represent to the Centre to import at least fertilizers from foreign countries?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : But I may tell the hon. Member that those who require face powder will not be satisfied with ammonium sulphate. Ammonium sulphate is also imported.

---

*Printed as Appendix I on pages 736 infra.

[13th December 1961]

SRI S. M. ANNAMALAI : ஸார், இப்பொழுது அம்மோனியம் சல்பேட் விலையை மத்திய சர்க்கார் குறைத்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அதனால், நம் மாகாணத்தில் "டிமாண்ட்" அதிகமாக வில்லையா? அப்படியானால், இந்த ஆண்டு மேலும் அதிகமாக ரசாயன உரங்களைப் பெற என்ன முயற்சிகள் செய்யப் பட்டன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சர்க்கார் எடுக்கும் முயற்சிகள் முக்கியமாக நீண்டகால முயற்சிகள்; உரம் நாட்டி லேயே உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளை அமைப்பது. அப்படி அமைக்கப்பட்டு வருகின்றன. அவைகளும் சீக்கிரத்தில் உற்பத்தி யைத் தொடங்கும். அவையும் தமிழ் நாட்டுக்குக் கிடைக்கிறது. மேலும் உரம் அதிகமாக வேண்டியிருந்தால், சூபர் பாஸ்பேட் போன்ற மற்ற உர உற்பத்தித் தொழிற்சாலைகள் அமைக்கப் படுகின்றன.

SRI A. MARIAPPAN : ஸார், சேலம் ஜில்லாவிற்கு உரம் குறைவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை அதிகப்படுத்த முயற்சி எடுக்கப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மற்ற ஜில்லாக் களைப்போல சேலத்திற்கும், எவ்வளவு கிடைக்கிறதோ அந்த அளவில் வினியோகம் செய்யப்படுகிறது.

SRI T. K. SUBBIAH : ஸார், 1958-59-ம் ஆண்டைவிட 1960-61-ம் ஆண்டுக்கு மிகவும் குறைந்திருக்கிறதே, அதன் காரணம் என்ன என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆண்டு பூராவுக்கும் கிடைத்த சப்ளை இதிலே கொடுக்கப்படவில்லை. வருஷம் பூராவை யும் பார்த்தால் முன்னால் 50 சதவிகிதமாக இருந்தது, இப்பொழுது 60 பர்சென்ட் வரை கிடைத்திருக்கிறது; அதிகமாகக் கிடைத் திருக்கிறது.

SRI T. K. SUBBIAH : 1960-61-ல் மிகவும் குறைந்திருக்கிறதே, அதற்குக் காரணம் என்ன என்றுதான் நான் கேட்டேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கிடைத்தது விநியோகிக்கப்பட்டு வருகிறது. இதைத் தவிர வேறு என்ன காரணத்தைச் சொல்லமுடியும்?

SRI N. R. THIAGARAJAN : 1956-57-ல் மதுரை ஜில்லா விற்கு ஏறத்தாழ 8,150 டன் வழங்கப்பட்டு இருந்தது. ஆனால் 1960-61-ல் 4,000 டன்தான் வழங்கப்பட்டது. பாதியாகக் குறைந்து விட்டது. மொத்தமாகப் பார்க்கும்பொழுது 1956-57-ல் 1,25,000 டன் கொடுக்கப்பட்டது. 1960-61-ல் 1,05,000 டன் கொடுக்கப் பட்டது. மொத்தத்தில் 20,000 டன்தான் குறைந்திருக்கிறது என்றாலும், மதுரையைப் பொறுத்தவரையில் பாதியாகக் குறைக் கப்பட்டதற்குக் காரணம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத் தினருக்கு ஒன்று மட்டும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மாவட்டங்களைப் பொறுத்தவரையில் ஓரவஞ்சம் கிடையாது.

அந்தந்த மாவட்டங்களின் தேவையையும், அங்கே உள்ள பயிரையும் கணக்கில் வைத்துக்கொண்டுதான் விநியோகிக்கப்பட்டிருக்கிறது.

*Thandarampattu village (water-supply)*

* 2296. *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI P. S. SANTHANAM) : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு, செங்கம் வட்டம், தண்டாரம்பட்டு கிராமத்திற்கு குடிதண்ணீர் விஷயமாய் அவ்வூர் பஞ்சாயத்து போர்டு கேட்டதுண்டா ?

(இ) அப்படியானல், அந்த விஷயம் எந்த நிலையில் இருக்கிறது ?

THE HON. C. SUBRAMANIAM : (அ) & (இ) The Collector of North Arcot has been asked to furnish requisite information and his report in the matter is awaited.

*Vriddhachalam Road (metalling)*

* 2297. *Q.*—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. SELVARAJ) : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

விருத்தாசலம் பாலக்கொல்லை சாலையில் ஆலடியிலிருந்து விருத்தாசலம் வரை கப்பி போடுவதற்கும் பாலங்கள் கட்டுவதற்கும் உள்ள (P.W.D.) திட்டம் என்னவாயிற்று ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The work has been taken up for execution and is in progress.

*Lands (collection of rubbish)*

* 2300. *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் குப்பை கொட்ட தனி இடம் ஆர்ஜிதம் செய்து கொடுக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Orders have already been issued to the effect that the Poramboke lands which have been vested with the Panchayats can be utilized for collecting rubbish and raising compost. The Collectors have been asked to issue instructions to their subordinate Revenue Officials to see that convenient available spaces are marked to the panchayats at the village by karnams, etc., so that they can be made use of by panchayats for collecting rubbish and raising compost.

SRI S. M. ANNAMALAI : கனம் அமைச்சர் அவர்கள் பதிலில் பஞ்சாயத்து போர்டுகளுக்கு புறம்போக்கு நிலத்தை ஒதுக்கிக் கொடுப்பதற்கு கலெக்டர்களுக்கு உத்தாவிட்டிருப்ப